வமுள்ளமும்முரசங்களும் சதாகாலம் ஆரவாரிக்கும்படி அரசா செய்து அதற்குமேல்சாமீப்பிய பதம்பெற்றுவாழ்ந்தான்—எ-று.

(மும்முரசாவன-மணமுரசு-ரணமுரசு-செயமுரசு என்பவை.)

என்றிசைத்துவிழிகண்முகிழ்த்தானந்தக்களிதிளைப்பவிருந் தான்சூத, னன்றிசைத்தான்சூதனமக்கென நைமிசாரணிய நல்லோரெல்லாம், வென்றியடைத்தனம்பாவக்கடலுடைந் துய்ந்தனங்கதியும்விளைந்ததென்று, வொன்றியபத்தியராய் கழுக்குன்றேசிவனமக்கென்றுளத்திற்கொண்டார்.

(இ-ள்-) சூதமகாரிஷியானவர் இவ்வாறுசொல்லிக்கண்களைமூடி க்கொண்டு ஆனந்தக்களிப்புண்டாகத்தியானத்திலிருந்தார் - இவ ரிவ்வாறிருக்க நைமிசாரணிய முனிவர்கள்இந்தச்சூதமுனிவர் திருக் கழுக்குன்றச்சரித்திரத்தை நமக்குநன்றாகச்சொல்லினர் - அதை கேட்டுநாம்வென்றியடைந்தோம்பாவக்கடலு டைந்து உய்ந்தோம் மோக்ஷசாம்பிராச்சியமும் கிடைத்ததென்று மிகுந்தபக்தியுள்ள வர்களாய்த் திருக்கழுக்குன்றமே நமக்குப் பரமசிவமென்று உள்ள த்திற்கொண்டார்கள்—எ-று. (௰௩)

இன்னதிருக்கழுக்குன்றப்புராணத்தையிசைத்தோர் மற்றிசை யினென்றோரு, மன்னசுவை செவிக்கொண்டோர் வரைந்தோரும் கயிற்றோடலரிட்டோர், நன்னரருச்சனைபுரிந்தோர் வேதமறு த்ததொரு நாதன்பாதம், அன்னருமுத்தியும்பெறுவர்மறுமை ம்மையிற்செல்வத்துவகைகூர்வார்.

(இ-ள்) இத்தகைமையுள்ள திருக்கழுக்குன்றப்புராணத்தைச் சொ ல்லுகின்றவர்களும் - சொல்லுமென்றவர்களும்- அந்தச்சரித்திர ரியத்தைக்காதினாற்கேட்பவர்களும் - எழுதினவர்களும்அந்த த்தைக்குமையிட்டுக்கயிற்றோத்து கொடுப்பவர்களும்-அன் றிந்தப்புராணத்தை நன்மையுடன் பூசித்தவர்களும் -வேதங்களா பூசிக்கப்பட்ட வேதகிரீசருடைய திருவடிகளில் கிடைப்பதற்கரிய மோக்ஷம்பெறுவார்கள் - இம்மைமறுமையிற்செல்வமுள்ளவர்களா யிருப் பார்கள்—எ-று. [சூதகுருச்சருக்க முற்றியது.] (௰௪)

ஆகசருக்கம் - ௨௩ - திருவிருத்தம்-௮௱௨

திருச்சிற்றம்பலம்.